


# தீக்கதிர்

ஆசிரியர்: எம். என். ராவுண்ணி

கதிர் 1 | சனிக்கிழமை | 16-5-1964 | விலை 10 காசு | பொறி 47




# கறைபடிந்த நாற்பது ஆண்டுகள்!

## கம்யூனிஸ இயக்க வரலாற்றையே களங்கப்படுத்தியவர் டாங்கே!

40 ஆண்டுகளுக்கு மேல் கம்யூனிஸ்ட் இயக்கத்தில் பணியாற்றியவர் டாங்கே. ஏறத்தாழ 17 ஆண்டுகள் சிறையில் வாடியவர் டாங்கே. அவருடைய தியாகம் என்ன? கட்சிக்கென வாழ்நாள் முழுதும் உழைத்த தொழிலாளி வர்க்கத் தலைவனை இன்று சிலர் பிரிட்டிஷ் உளவாளி என்று சொல்லுகிறார்களே இது நியாயமா?'' என்று திரிபுவாதிகள் தெருத் தெருவாகப் பிரச்சாரம் செய்கிறார்கள்.

மாட்சிமை தங்கிய மன்னர் பிரானுக்கும் அவரது ஆட்சிக்கும் சேவை செய்வேனென்று டாங்கே எழுதிய கடிதம் கள்ளக் கடிதம் என்று இவர்கள் வாதாடுகிறார்கள்.

1924ம் ஆண்டு டாங்கே கான்பூர் சிறையிலிருந்து எழுதிய இக்கடிதம் வேண்டுமென்றே அரசாங்கத்தாரால் தயாரிக்கப்பட்ட கள்ளக் கடிதம் என்றே இவர்கள் சொல்லுகிறார்கள். வழக்கு ஆரம்பிப்பதற்கு முன்னதாகவே இந்தக் கான்பூர் சதி வழக்கில் யார் யாரையெல்லாம் இணைக்கவேண்டுமென்பது உயர்தரப் போலீஸ் அதிகாரிகளும் அரசாங்கமும் நடத்திய கடிதப் போக்குவரத்து நடத்தியிருக்கிறார்கள். அக்கடிதங்களில் ரகசியப் போலீஸ் அதிகாரிகள் டாங்கேயை வெளியே விட்டுவைப்பது அரசாங்கத்திற்கு லாபகரமானது என்று குறிப்பிட்டுள்ளதைப் பற்றி இத் தோழர்கள் என்ன சொல்லுவார்களோ தெரியவில்லை! இளம்பிராயத்தில் டாங்கே அவ்வாறு எழுதினாலும் இன்று அதை பெரிதுபடுத்தலாமா? என்றும் சிலர் கேட்கிறார்கள். கடிதங்களுடைய விவரங்களுக்குள் போக நான் விரும்பவில்லை. ஆனால் டாங்கேயின் 40 ஆண்டு அரசியல் வாழ்க்கையை நேர்மை உள்ளத்துடன் பரிசீலிப்போருக்கு டாங்கே இத்தகைய கடிதங்களை எழுதியிருப்பார் என்பதில் கொஞ்சங்கூட சந்தேகமேயிருக்கமுடியாது.

கான்பூர் சதி வழக்கிற்குப் பிறகு கட்சிக்குள் தனக்கென ஒரு கோஷ்டியை திரட்டுவதற்கும், தனக்குப் பிடிக்காதவர்களுக்கெதிராக எதையும் செய்வதற்கும் அவர் தயங்கவில்லை என்பதற்கான பல நிகழ்ச்சிகளையும் எடுத்துக் கூற முடியும், அவர் அன்று நடத்திய பத்திரிகையிலும் எழுதிய நூல்களிலும், கட்டுரைகளிலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கெதிராக தொழிலாளி வர்க்கத்தைத் திட்டுவதிலும் விரிவான தேசிய இயக்கத்தைக் கட்டுவதிலும் ஓர் கம்யூனிஸ்ட் அவசியம் செலுத்த வேண்டிய ஆர்வத்தையும், உறுதியையும் பார்க்கவே முடியாது. அவர் நடத்திய 'சோஷலிஸ்ட்' என்ற பத்திரிகையின் பிரதிகளை படித்திருப்போருக்கு இது நன்கு விளங்கும். பம்பாய் அரசாங்கத்தின் உள்துறை இலாகாவின் கடிதம் ஒன்றில் ''டாங்கேயின் கட்டுரைகளிலும், நூல்களிலும் பிரிட்டிஷ் எதிர்ப்பு அநேகமாக இல்லையென்றும், அவர்மீது நடவடிக்கைகள் எடுக்க வேண்டாமென்றும் குறிப்பிட்டிருப்பதே இதற்குச் சான்றாகும்.

### சிறையிலிருந்தே சீர்குலைவு வேலை செய்தார்!

மீரத் சதி வழக்கில் டாங்கே கைதான பிறகு தன்னுடைய கட்சி விரோதச் செயல்களை மேலும் அதிகப்படுத்தினார். தனக்குப் பிடிக்காத கம்யூனிஸ்டுகளைப் பற்றி போலீசாருக்கும், அரசாங்கத்திற்கும் தகவல் கொடுக்கும் துரோக புத்தி அன்றிருந்தே அவரிடம் மேலோங்கியிருந்ததைக் காண முடியும்! 1928-ல் இத்தகைய கட்சிவிரோத நடவடிக்கைகளுக்காக அவர் கட்சியிலிருந்து வெளியேற்றப்பட்டார். ஏறத்தாழ 7 ஆண்டுகள் கட்சியின் ஓர் சாதாரண உறுப்பினராகக்கூட அவரைக் கட்சி ஏற்றுக்கொள்ளவில்லை. ''40 ஆண்டு தியாகத்தைப் பற்றி'' பேசும் பேர்வழிகளுக்கு ஒருவேளை இது தெரியாமலிருக்கலாம்.

கட்சியின் முடிவுகளை மீறுவதும் பிறரை கட்சி முடிவுகளுக்கெதிராக செயலாற்றத் தூண்டுவதும் அனேகமாக அவருடைய பழக்கமே எனலாம், பன்முறை இதற்காக கட்சி அவரைக் கண்டித்ததுண்டு. சில சந்தர்ப்பங்களில் பகிரங்கமாகவும் கண்டிக்க நேர்ந்தது. ஆனால் இத்தகைய கண்டனங்களாலும், நடவடிக்கைகளாலும் அவரை திருத்த முடியவில்லையென்பது 1959-ல் அவர் பம்பாயில் செய்த பிரசங்கம் எடுத்துக் காட்டியது. 1959 செப்டம்பர் மாதத்தில் மத்திய நிர்வாகக் கமிட்டி அவரை கண்டித்ததைக் குறிப்பிட்டு பம்பாய் பொதுக் கூட்டத்தில் அவர் பின்வருமாறு பேசினார். ''நிர்வாகக் கமிட்டி என்னைக்கண்டித்தது; பலதடவை கட்சி என்னைக் கண்டித்ததுண்டு; ஆனால் வரலாறு உண்மையை நிரூபித்துவிட்டது; எல்லா சந்தர்ப்பங்களிலும் என்னைக் கண்டித்த கட்சிதான் தவறு செய்தது — நான் செய்யவில்லை'' என்று ஆணவமாகப் பேசினார். கட்சியைக் காட்டிலும் மேம்பட்ட தவறே செய்யாத தலைவராக அவர் தன்னைத் தானே நினைத்துக்கொள்கிறார். இன்னொரு விஷயத்தையும் உங்கள் முன் கொண்டுவர விரும்புகிறேன்.

1952-ம் ஆண்டு பொதுத் தேர்தலில் மகாராஷ்டிரத்தில் காங்கிரஸ் கட்சியை முறியடிக்க 'ஹிந்து மகா சபை' உள்ளிட்ட கட்சிகளை ஒன்றுசேர்த்து ஐக்கிய முன்னணி அமைக்க வேண்டுமென்றார் டாங்கே! பின் மத்தியக் கமிட்டி அவருடைய தவறான போக்கை கண்டித்து ஹிந்து மகா சபை போன்ற கட்சிகளை ஒன்று சேர்த்து ஐக்கிய முன்னணி அமைக்கக்கூடாதென்று அறிவுறுத்தியது.

தொழிலாளி வர்க்கத்தின் ஒப்பற்ற தலைவரென்று தன்னை பிறர் என்றும் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கருதுகிற டாங்கே மாகாணங்கள் புனரமைக்கப்பட்டபொழுது குறுகிய இனவெறிக்கு இரையான சோகக் காட்சியையும் நாம் பார்த்தோம்.

குஜராத் மாநிலத்தின் சில பகுதிகள் தன் சொந்த மாகாணமான மகாராஷ்டிரத்திற்கு வேண்டுமென்றும் கன்னடத்திற்குரிய பெல்காமும் மகாராஷ்டிரத்திற்கு வேண்டுமென்றும் அவர் பகிரங்கமாகப் பேசினார். ''சம்பந்தப்பட்ட மாநில கட்சிகளுடன் கலக்காமல் தகராறுக்குரிய எல்லைப் பகுதிகள் பற்றி கட்சித் தோழர்கள் பகிரங்கமாக பேசக்கூடாதென்ற'' கட்சி முடிவை அவர் பகிரங்கமாக மீறினார். பெல்காம் பிரச்சினையில் சத்தியாக்கிரஹம் நடத்தப்போவதாகவும் சொன்னார். நடைபெற்ற தேசியக் கவுன்சில் இத்தகைய நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடாதென்ற முடிவெடுத்து தாக்கீது அனுப்பிய பிறகும்


(5-ம் பக்கம் பார்க்க)


## நமது தலைவர்கள் சுற்றுப்பயணம்

### தோழர் பி. ராமமூர்த்தி, எம்.பி.

மே. 13 — காஞ்சிபுரம்
14, 15 — தஞ்சை மாவட்டம்
16 — உடுமலைப்பேட்டை
17 — மூணாறு (கேரளா வரவேற்பு)
18 — கோயம்புத்தூர்
19, 20 — நெல்லை மாவட்டம்
21 — ராமனாதபுரம்
22, 23 — மதுரை மாவட்டம்
24 — நெய்வேலி

### தோழர் வி. பி. சிந்தன்

மே. 17 — கோவை நகரம்
18 — பொள்ளாச்சி
19 — ஈரோடு

### தோழர் ஏ. பாலசுப்ரமணியம்

மே. 15, 16 — மதுரை மாவட்டம்
17 — திருப்பத்தூர் (ராமனாதபுரம் வட்டம்)
18, 19 — திண்டுக்கல்
20 — பழனி

## பஸ் கட்டண உயர்வை எதிர்த்து அணிதிரள்வீர்!

தீக்கதிர்

மலர் 1 | 16-5-64 | பொறி 47

# எது ஒற்றுமை வழி?

கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக் கவுன்சில் உறுப்பினர்களான 32 தலைவர்கள்மீது நடவடிக்கை எடுத்த பின்னர் டாங்கேயும் அவரது கோஷ்டியினரும் நாடு முழுவதும் கட்சித் தோழர்களிடமிருந்தும் தொழிலாளி வர்க்கத்தினிடமிருந்தும் பரிபூரணமாக தனிமைப்படுத்தப்படும் நிலைமை இன்று ஏற்பட்டுள்ளது. எங்கு சென்றாலும் டாங்கே கோஷ்டியினர் மீது கேள்விக் கணைகள் தொடுக்கப்படுகின்றன. கட்சியை சீர்குலைக்காதீர், 32 தலைவர்கள் மீது எடுத்த நடவடிக்கையை ரத்து செய்வீர், அத் தலைவர்களுடன் கூடிப் பேசி ஒற்றுமைக்கு வழி காண்பீர் என்று கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களாக உள்ள மிகப் பெரும்பாலான தோழர்களும், கட்சிக் கிளைகளும் தலைமைக் கமிட்டிகளும் வற்புறுத்தி வருகின்றன. உதாரணமாக சென்னை நகரத்தை எடுத்துக்கொண்டால் டாங்கே கோஷ்டியின் மாவட்ட தலைமைக்குழு எடுத்துள்ள ஒழுங்கு நடவடிக்கைகளைப் பார்த்தால் கூட இந்த மாவட்டத்தில் உள்ள 70 திலிருந்து 80 சதவிகிதம் தோழர்களும் கிளைகளும் இன்றைய டாங்கே கோஷ்டியின் தலைமையை நிராகரித்து விட்டது என்பது தெரிவு.

இதே நிலைமைதான் இந்த ராஜ்ய முழுவதும் ஏனைய ராஜ்யங்களிலும் ஏற்பட்டுள்ளது என்பதற்கு பல உதாரணங்கள் தர முடியும்.

நிலைமை இவ்வாறு டாங்கே கோஷ்டியின் சதித்திட்டங்களுக்கு எதிராக உருவாகி வருவதின் காரணமாக அவர்கள் கட்சியின் ஒற்றுமையை பாதுகாப்பது பற்றி வாயளவில் பேச முன் வந்துள்ளார்கள்.

டாங்கே "நியூஏஜில்" எழுதியுள்ள ஒரு கட்டுரையில் பிளவுகளுக்கெல்லாம் காரணம் 32 தலைவர்கள் தான் என்றும் அவர்கள் பிளவுப்போக்கை விட்டு திரும்பி வந்தால் தாங்கள் எடுத்துள்ள நடவடிக்கைகள் பற்றி பரிசீலனை செய்யத் தயாராக இருப்பதாகவும் கூறி கட்சி அங்கத்தினர்களின் கண்களில் மண் தூவி தம்முடைய பிளவு வேலைகளை யெல்லாம், கட்சி விரோத செய்கைகளை எல்லாம் மூடி மறைக்க முயற்சி செய்கிறார். அதாவது அவர்தான் ஒற்றுமைக்காக நிற்பதாகவும் 32 தலைவர்கள் ஒற்றுமைக்கு விரோதமாக இருப்பதாகவும் காட்டிக்கொள்ள முயற்சி செய்கிறார்,

கட்சி ஒன்று பட்டு நின்று போராட வேண்டும் என்பதைப் பற்றி உண்மையில் டாங்கேக்கும், அவரது கோஷ்டிக்கும் அக்கறை உண்டா என்பதுதான் கேள்வி

கட்சி தோழர்கள், பொதுமக்கள் கண்ணில் மண் தூவும் நோக்கம் அவர்களுக்கு இல்லையென்றால், ஒற்றுமை வளர்ப்பது தான் அவர்களது குறிக்கோள் என்றால் தோழர் ஈ.எம்.எஸ்ஸும் மற்ற தோழர்களும் தேசிய கௌன்சில் கூட்டம் நடக்கும் போது டாங்கே கடிதங்களை விவாதிக்கின்ற காலத்தில் தலைமைப்பதவியிலிருந்து அவர் சற்று விலகி இருக்க வேண்டுமென்ற கோரிக்கையை ஏற்றுக் கொண்டிருக்கலாமே?

அதுபோகட்டும் இன்றைக்காவது என்மேல் இவ்வளவு குற்றச்சாட்டுகள் சுமத்தப்படுகின்றனவாகையால் அவைகளை பற்றி விசாரிக்கின்ற காலத்தில் நான் தாற்காலிகமாக தலைமைப் பீடத்திலிருந்து விலகுகிறேன் என்று கூறி விலகி இருக்கலாமே?

ஒற்றுமையின் மீது டாங்கேக்கு நம்பிக்கை இருக்குமென்றால் இந்தக்காலத்தில டாங்கே கோஷ்டியினர் எடுத்த ஒழுங்கு நடவடிக்கைகளை யெல்லாம் ரத்து செய்துவிட்டு எல்லாத தோழர்களையும் மீண்டும் அழைக்கலாமே? இது அவர்கள் சுலபத்தில் செய்யக்கூடிய ஒரு காரியந்தானே?

கட்சி அங்கத்தினர் அனைவருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கக்கூடிய விதத்தில் இரு சார்பினரும் சேர்ந்து கட்சி அங்கத்தினர் பட்டியலை பரிசீலனை செய்து இருவரும் ஒப்புக்கொள்கின்ற விதத்தில் மகாநாட்டை நடத்த ஒப்புக்கொள்ளலாமே?

மகாநாட்டுக்கு முன்பு இரு சார்பினரும் சமர்ப்பிக்கும் கருத்து வேற்றுமை உள்ள தஸ்தாவேஜுகளை கட்சித் தோழர்கள் அனைவருக்கும் வழங்கி உட்கட்சி விவாதத்தை முறையாக நடத்த ஏற்றுக்கொள்ளலாமே?

கட்சி ஒற்றுமையில் டாங்கே கோஷ்டிக்கு நாட்டம் இருக்குமானால் இந்த சர்வசாதாரண கோரிக்கைகளை ஏற்றுக் கொள்ள மறுப்பது ஏன்?

காரணம் உண்டு! மேற்கூறிய கோரிக்கைகளை ஏற்றால் டாங்கே கோஷ்டியின் திரிபுவாத பிளவு வேலைகளுக்கு கட்சிக்குள் அப்புறம் இடம் இருக்காது! கொள்கை ரீதியாக டாங்கே கோஷ்டி முறியடிக்கப்படும். ஸ்தாபனரீதியாக கட்சி தன்னுணர்வுடன் ஒன்றுபட்டு வளர்ந்தோங்கும். இது திரிபுவாதிகளுக்கு ஒரு தோல்வியாக முடியும். இதை டாங்கே கோஷ்டி விரும்பவில்லை. அதனால் தான் ஒன்றுபட்ட கட்சி உருவாக நாம் கூறும் ஆலோசனைகளை டாங்கே கோஷ்டி ஏற்க மறுத்து வருகிறது.

கட்சி ஒற்றுமையில் அக்கறை இருந்தால் நாம் கூறும் ஆலோசனைகளை வீண் கௌரவ பிரச்சினை ஆக்காமல் ஒற்றுமைக்கான வழிமுறைகள் என்ற முறையில் ஏற்க முன்வர வேண்டும். மாய்மாலப் பேச்சினால் கட்சி தோழர்களை ஏமாற்றி விடமுடியாது. கலெக்டர் அலுவலக உத்தரவுகள் போடுவது போல், உத்தரவு போடுவதின் மூலம் ஒற்றுமையை வளர்க்க முடியாது.

கம்யூனிஸ்ட் கட்சியில் ஒற்றுமை என்பது உணர்வுபூர்வமாக ஏற்படும் ஒற்றுமை; புரட்சிகாமான ஒரு கொள்கையின் அடிப்படையில் ஏற்படும் ஒற்றுமை. இதற்கான அடிப்படையே நாம் மேலே கூறியுள்ள ஆலோசனைகள்.

## திரிபுவாதிகளின் மனிதத் தன்மையற்ற செயல்!

தோழர் எம். துரைசாமி 1952-ல் இருந்து கம்யூனிஸ்ட் கட்சிக்கு அயராது பாடுபட்டுவரும் ஊழியர். அவரது தொண்டினை நன்கு பயன்படுத்திக்கொள்வதற்காக அவர் மாகாண கமிட்டி அலுவலகத்திலேயே பணிபுரியுமாறு அமர்த்தப்பட்டிருந்தார். எந்நேரமும் பம்பரம்போல் சுழன்று கொண்டு—குடும்பத்தைப்பற்றி நினைவுகூட இல்லாமல் இராப்பகலாக அவர் கட்சி வேலைகளை கவனித்துக்கொண்டிருப்பார். சாதாரண தொண்டர்களிலிருந்து தலைவர்கள்வரை தோழர் துரைசாமியின் உதவியை நாடாதவர்களே கிடையாது. அவரைத் தெரியாத தலைவர்களே கிடையாது எனலாம். அத்தகைய திறமையும், தொண்டுள்ளமும், பண்பும் படைத்த தோழர் துரைசாமியிடம் திரிபுவாதிகள் வஞ்சம் தீர்த்திருக்கின்றார்கள் என்றால் அவர்கள் பழிதீர்க்கும் படலத்தில் எவ்வளவு தூரம் சென்றுள்ளார்கள் என்று தெரிகிறதல்லவா?

தோழர் துரைசாமி நான்கு குழந்தைகளுடன் கட்சி அலுவலகத்தில் தந்த சொற்ப ஊதியத்தைக்கொண்டு ஜீவனம் செய்துவந்தார். அவரைச் சென்ற 6-5-64ல் எத்தகைய முன்னறிவிப்புமின்றி " நீ இன்று முதல் ஆபீசுக்கு வர வேண்டாம்" என்று திரிபுவாதிகள் கூறிவிட்டார்கள். தோழர் துரைசாமியிடம் சாதாரண நீதி கூட காட்ட மனம் வராத இத் திரிபுவாதிகளின் மனிதத் தன்மையை என்னென்று சொல்லுவது! தொழிலாளி வர்க்க நலனுக்காக நிற்பவர்கள் என்று கூறிக்கொள்ளும் இவர்கள், தோழர் துரைசாமியை கேவலம் பீடித் துண்டைத் தூக்கியெறிவது போல் எறிந்துவிட்டார்கள். கம்யூனிஸ்ட் சித்தாந்தத்தில் ஆழ்ந்த பற்றுகொண்டு குறைந்த ஊதியத்தையும் பொருட்படுத்தாமல் கடந்த 12 வருடங்களாக தன்னலமின்றி ஓயாது உழைத்துவந்த அந்தத் தோழருக்கு திரிபுவாதிகள் தந்த மரியாதை இது!

ஏ திரிபுவாதிகளே! பழிவாங்குவதன் மூலம் எந்தக் கம்யூனிஸ்டையும் தன்வசம் ஆக்கிவிடலாம் என்று நினைத்தால் நீங்கள் முட்டாள்களின் சொர்க்கத்தில் இருப்பவர்களே ஆவீர்கள்.

உண்மை ஊழியர்களுக்கு தொழிலாளி வர்க்கம் என்றைக்கும் பாதுகாப்பு கொடுக்கத் தவறியதில்லை. திரிபுவாதிகளால் வெளியேற்றப்பட்ட தோழர் துரைசாமி சிந்தாதிரிப்பேட்டை கட்சிக் கிளையின் செயலாளராக அவ்வட்டத் தோழர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இந்த நிகழ்ச்சி திரிபுவாதிகளுக்கு புத்தி புகட்டட்டும். நல்ல மாட்டிற்கு ஒரு சூடு போதுமல்லவா!

6-ம் பக்கத் தொடர்ச்சி

தனக்களிக்கப்பட்ட ஒரு வீட்டை தன் குடும்பத்துடன் வந்து தங்குவதற்காக காலி செய்து தாருங்கள் என்று கேட்பதற்கு இத்தனை கூக்குரல் போட முன் வந்திருக்கிறாரே! ஏன்? டாங்கேயின் சாமான்களை இன்னும் நிரேன்கோஷ் தூக்கி எறியவில்லையே! அரசாங்கத்திற்கு அவர் கடிதம் எழுதவில்லையே! காலி செய்து தாருங்கள் என்று

அந்த வீட்டிற்கருகாமையில் கூட அவர் இன்னும் போகவில்லையே! காலி செய்து தாருங்கள் என்று தானே டாங்கேக்கு கடிதம் எழுதினர் அதற்குள் டாங்கேயின் கையாளுக்குக் கோபம் வந்துவிட்டதே! ஏன்? திரிபுவாதிகளே!

உமக்கு ஒரு நீதி! உலகத்துக்கொரு நீதியோ?

கொள்கை ரீதியில் போராடத் திராணியற்று தொழிலாளி வர்க்கத்திற்குத் துரோகம் செய்யும் கும்பலே!

டாங்கே பேசிவிட்டால் பொய் மெய்யாகி விடாது. டாங்கே எழுதிவிட்டால் கருப்பு வெள்ளையாகிவிடாது.

குற்றம் குற்றமே! நெற்றிக் கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே!

# தஞ்சை மாவட்டத்திற்கு புதிய தலைமை தேர்ந்தெடுக்கப்பட்டது

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தஞ்சை மாவட்ட கிளைப் புக் கூட்டம் 6-5-64ல் நாகபட்டிணத்தில் நடைபெற்றது. 32 தேசியக் கவுன்சில் உறுப்பினர்களின் அறிக்கையையும் அவர்களின் தலைமையையும் ஒப்புக் கொள்ளும் மாவட்ட கவுன்சில் உறுப்பினர்களும் தாலுக்கா வட்டார கமிட்டிகளின் செயற்குழு உறுப்பினர்களும் 71 பேர் கலந்து கொண்டனர். தஞ்சை மாவட்ட விவசாயிகள் இயக்கத் தலைவரும் கட்சியைக் கட்டி வந்தவர்களில் ஒருவருமான தோழர் எஸ். வடிவேல் இக் கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்தப்பட்ட பின், தலைமை வகித்த தோழர் எஸ். வடிவேல் தனது முகவுரையில், தஞ்சை மாவட்ட கட்சித் தலைமையில் ஆதிக்கம் வகிக்கும் காத்தமுத்து, ராமசாமி, ஏ. கே. சுப்பையா கோஷ்டி, கட்சியை கடந்த இரண்டு வருட காலமாக எவ்வாறு நிலப் பிரபுக்களுக்கும், காங்கிரஸ் சர்க்காருக்கும் அடகு வைத்து வந்திருக்கிறது என்பதை தோலுரித்துக் காட்டினர். இதன் உச்சகட்டமாக, கடந்த நகரசபைத் தேர்தலில் இக் கோஷ்டி கட்சியின் அடிப்படைக்கொள்கைகளையும் அமுலிலிருந்தஅரசியல் தீர்மானத்தையும் தூக்கியெறிந்து கட்சியின் தலைமையில் உள்ள மக்களை காளை மாட்டுச் சின்னத்திற்கு ஓட்டளிக்கும்படி உத்தரவிட்டு முகத்தில் கரியைப் பூசிக் கொண்டது. மாவட்டத்தின் கட்சி உறுப்பினர்களில் 80 சதவிகிதத்தினருக்கு மேல் இந்த திரிபுவாத, சந்தர்ப்பவாத போக்கை எதிர்த்து கிளர்ந்தெழுந்துள்ளதோடு மார்க்ஸிய-லெனினிய வழியில் கட்சியைக் கட்டவும், மக்கள் பிரச்சினைகளுக்காகத் தொடர்ந்து போராடவும் உறுதியுடனும், தன்னடக்கத்துடனும் செயல்படத் தியாகிகள் பேரால் சபதம் ஏற்போம் என்றார்.

கட்சியின் மத்திய இணைப்புக் குழு உறும்பினர் தோழர் என். சங்கரய்யா இன்றைய அகில இந்திய, மாநில கட்சியின் நிலையைப் பற்றியும் மார்க்ஸிஸ்ட்—லெனினிஸ்டுகளின் கடமையைப் பற்றியும் 5 மணி நேரம் விரிவுரை ஆற்றினார்.

அடுத்து தோழர் கே. ஆர். ஞானசம்பந்தம், தஞ்சை மாவட்டக் கட்சியின் அரசியல் ஸ்தாபனங்களைப் பற்றியும் திரிபுவாதத் தலைமை எப்படி கட்சி அணிகளால் மூக்கறுபட்டு வருகிறது என்பதையும் விவரித்தார். தோழர் ஆர். முருகையா மாநில ப்ளீனம் கூட்டறிக்கையை வாசித்தார். பின்னர் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1) திருத்தல்வாத டாங்கே கோஷ்டியின் அரசியலையும் அக் கோஷ்டியின் மத்திய, மாநில மாவட்டத் தலைமைகளையும் இக் கூட்டம் நிராகரிக்கிறது. 32 தேசியக் கவுன்சில் உறுப்பினர்களின் அறிக்கையையும், அவர்கள் தலைமையையும் ஏற்கிறது, அவர்களின் வழிகாட்டுதலின் படி செயல்பட உறுதியளிக்கிறது. சரியான மார்க்ஸிய-லெனினிய வழியில் நமது வேலை திட்டத்தையும், தலைமையையும், உருவாக்க மகாநாடுகளை நடத்தக் கோருகிறது.

2) தஞ்சை மாவட்ட கட்சி அமைப்புகளும், உறுப்பினர்களும், கட்சியின் தலைமையின் கீழ் உள்ள மக்களும், திரிபுவாதக் கோஷ்டி தலைமையையும் அவர்களது சித்தாந்த நிலையையும் நிராகரிக்கும்படியும் இக் கூட்டத்தில் தேர்ந்து எடுக்கப்படும். மாவட்டத் தலைமையோடு தொடர்பு கொண்டு, இதன் வழிகாட்டுதலின்படி செயல்படும்படியும் கேட்டுக்கொள்கிறது.

பின்னர் 55 தோழர்களைக் கொண்ட மாவட்ட இணைப்புக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

**நாகபட்டினம்**

ஆர். முருகையா, ஜி. சின்னையன், பி. காளிமுத்து, ஜி. பக்தவத்சலம், வே. மீனாட்சிசுந்தரம், என். எம். காத்தமுத்து, எஸ். கணேசன், சு. சின்னசாமி, வி. மகாலிங்கம், எம். கோதண்டராமன், பி. நாகராஜன், மு.ஜீவாராமன், எ.ஜி. கஸ்தூரி ரெங்கன், வி. கண்ணப்பன், என். கோபால்.

**மாயவரம்**

ஜி. பாரதிமோகன், வி. ஆர். செல்லப்பன், சிங்காரம், காளிமுத்து, ராமமூர்த்தி, கேசவன், கிருஷ்ணசாமி, அய்யாரு, சம்பா எம். ராமசாமி, முனிசாமி, வி. கே. முத்துசாமி.

**நன்னிலம்**

ஜி, வீரையன், கே.ஆர். ஞானசம்பந்தம், ஏ.பழனிவேல், மணி, ஆர். மாணிக்கம், பி. வடிவேல், சேஷய்யா, ஷண்முகம், பி.வைத்திலிங்கம்.

**மன்னார்குடி**

ஆர். ரெங்கன் பி.ஏ.,பி.எல்., எ. நடராசன், உ. வே. ராமு, வி. ராமகிருஷ்ணன், சி. காசிநாதன், ஏ. தங்கவேல், வி. அய்யாசாமி, பி. வெங்கடேசன், தொப்பையாஸ்.

**திருத்துறைப்பூண்டி**

எஸ். வடிவேல், பி. எஸ். தனுஷ்கோடி, பி. எஸ். ஜகன்னாதன், கே, ராமச்சந்திரன், தனபால், கோபால், மலாயா கோவிந்தசாமி.

**தஞ்சாவூர்**

என். வெங்கடாசலம்

**குடந்தை**

மஹாய் கிருஷ்ணன், ஆர். ரெத்தினசாமி, சினிவாசன்

கீழ்க்கண்ட 14 தோழர்கள் நிர்வாகக் குழுவுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—

கன்வீனர்: கே. ஆர். ஞானசம்பந்தன், ஆர். முருகையா, எஸ். வடிவேல், பி. என். தனுஷ்கோடி, என். வெங்கடாசலம், வி. ஆர. செல்லப்பன், ஏ. நடராஜன், ஆர். ரெங்கன், ஜி. பக்தவத்சலம், வே. மீனாட்சிசுந்தரம், எஸ். கணேசன், ஜி. சின்னையன், ஜி. வீரையன், ஜி. பாரதிமோகன்.

## தஞ்சை மாவட்டத்தில் திரிபுவாதத் தலைமையை நிராகரித்து கீழ்க்கண்ட கிளைகள் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது

1) சிக்கல் கிளை
2) பாலையூர் கிளை
3) நீடாமங்கலம் வட்டாரக் கமிட்டி
4) கிவறூர் வட்டாரக் கமிட்டி
5) ஆவராணி—புதுச்சேரி கிளை
6) கிழையூர் கிளை—நாகை தாலுகா
7) திருவாரூர் வட்டாரக் கமிட்டி
8) திருப்பூண்டி கிளை
9) கொரடாச்சேரி வட்டாரக் கமிட்டி
10) நாகப்பட்டிணம் வட்டாரக் கமிட்டி
11) பெருங்கடம்பனூர் கிளை
12) தேமங்கலம் கிளை
13) ஒசத்தூர் கிளை
14) பெரியதும்பூர் கிளை
14) எட்டு குடி கிளை
16) வாழக்கரை கிளை
17) வேட்டைக்காரனிருப்புகிளை
18) நாகப்பட்டணம் நகரக் கமிட்டி
19) மாயூரம் தாலுகா கமிட்டி
20) தலைஞாயிறு வட்டாரக் கமிட்டி

# தமிழகத் திரிபுவாதத் தலைமையின் முறைகெட்ட செயல்

## தோழர் கே. எஸ். பார்த்தசாரதி அறிக்கை

தமிழ்நாடு கம்யூனிஸ்ட் கட்சி செயற்குழு என்பதின் பெயரால் என்னைப் பற்றியும், ஏீங்கள் ஜில்லாக் கமிட்டி விஷயமாகவும் ஜனசக்தியில் வெளியிட்ட அறிக்கையைப் பார்த்தேன். தோழர் ப. மாணிக்கம் அவர்களால் வெளியிடப்பட்ட சுற்றறிக்கையையும் கண்டேன்.

இந்த அறிக்கைபடி செங்கற்பட்டு மாவட்டத்தில் புதிய கமிட்டி அமைக்க, இந்த மாதம் 9, 10 தேதிகளில் கூட்டம் நடத்தப்போவதாகத் தெரிகிறது.

இத்தகைய கூட்டம் கூட்டுவது கட்சியின் கோட்பாடுகளுக்கும், கட்சியின் விதிகளுக்கும் புறம்பானதும், கட்சி விரோத செயலுமாகும். மாவட்ட கட்சி மகாநாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்டகட்சிக் கமிட்டியை கலைத்துவிடுகிற அதிகாரம் யாருக்கும் இல்லை, மேலும் அவர்கள் கூட்டும் அந்தக் கூட்டத்தில் கட்சி உறுப்பினர்களல்லாதவர்களையும் அழைத்திருப்பது கவனிக்கத்தக்கது.

ஆகவே கட்சி உறுப்பினர்கள், கட்சிக் கிளைகள், கமிட்டிகள் மேற்படி கூட்டத்தை நிராகரிக்க வேண்டுகிறேன். மேலும் மாவட்டத்திலுள்ள கட்சிக் கிளைகளும், கட்சி கமிட்டிகளும், ஏற்கனவே உள்ளதுபோல் காஞ்சீபுரத்தில் உள்ள மாவட்டக் கமிட்டியுடன் தொடர்புகொள்ள வேண்டுகிறேன்.

கே. எஸ். பார்த்தசாரதி
செயலாளர்,
செங்கற்பட்டு மாவட்ட கமிட்டி
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி.

## ஹிமாசலப் பிரதேசத்தில் திரிபுவாதத்தின் மண்டையில் அடி!

வடக்கே ஹிமாசலப் பிரதேச கம்யூனிஸ்ட் கட்சியிலுள்ள 300 கட்சி உறுப்பினர்களில் 200 பேர் டாங்கே கோஷ்டியை நிராகரித்து, 32 கம்யூனிஸ்ட்டுத் தலைவர்களின் அறிக்கைக்கு ஆதரவளித்தனர்.

ஹிமாசலப் பிரதேச சட்டசபையிலுள்ள ஒரே கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. யான தோழர் தாராசந்த், மண்டி மாவட்ட நிர்வாகக் குழு செயலாளர் தோழர் முபசிங், பிலாஸ்பூர் மாவட்ட நிர்வாகக் குழு செயலாளர் தோழர் முன்ஷிராம், சம்பா மாவட்ட நிர்வாகக் குழு செயலாளர் தோழர் மோகன்சிங், சிம்லா மாவட்ட நிர்வாகக் குழு உறுப்பினர் ஹர்பான்ஸ்லால் ஆகியோர் 32 தலைவர்களின் அறிக்கையை ஆதரிப்பவர்களில் முக்கியமானவர்கள்.

டாங்கே தலைமையைத் தூக்கி எறிந்துவிட்டு, கட்சி அணிகளை ஒன்றுபடுத்திப் பலப்படுத்த வேண்டுமென்று அவர்கள் விடுத்த கூட்டறிக்கையில் குறிப்பிட்டுள்ளனர்.

# டாங்கே கோஷ்டியின் திரிபுவாதத் தலைமையை ஏற்கமாட்டோம்

## 32 தலைவர்கள் அறிக்கைபடி வழி நடப்போம்

### நெல்லை மாவட்ட கட்சிக் கிளைகளின் தீர்மானம்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் இன்றைய அகில இந்தியத் தலைமைக் குழுவிலும், தமிழ் மாநில, நெல்லை மாவட்ட தலைமைக்குழுக்களிலும் ஆதிக்கம் வகித்துவரும் திரிபுவாத டாங்கே ஆதரவு கோஷ்டியினர், அமுலில் உள்ள விஜயவாடா கட்சிக் காங்கிரஸ் தீர்மானத்திற்கு விரோதமாக காங்கிரஸ் கட்சியுடன் பொது ஐக்கிய முன்னணி அமைக்க அரசியல்நிலை எடுத்து வருவதை நிராகரிக்கிறோம். அண்மையில் நடைபெற்ற நகரசபைத் தேர்தலில் இக்கோஷ்டி காங்கிரஸ் கட்சியோடு ஐக்கிய முன்னணி ஏற்படுத்திக் கொண்டது தற்செயலானதல்ல. கட்சியின் கொள்கையை பூர்ஷ்வா வர்க்கத்திற்கு வால் பிடிக்கும் திசைவழியில் இழுத்துச் சென்றதேயாகும்.

இத்திரிபுவாத கோஷ்டி காங்கிரஸ் கட்சியை ஆதரிக்க மறுத்த தோழர்களைப் பழி வாங்கும் நடவடிக்கையில் இறங்கியுள்ளது. மேலும் இப்பாதையிலேயே இக்கோஷ்டி தங்கள் திரிபுவாத அரசியல் நிலையை கட்சியின் கொள்கையாக மாற்ற போலி மாநாடுகளை நடத்த தயாரிப்பில் இறங்கியுள்ளது.

எனவே மேற்கண்ட திரிபுவாத கோஷ்டி தலைமைகளை நிராகரித்து விட்டு சரியான மார்க்ஸிஸ்ட் — லெனினிஸ்ட் கொள்கைகளைக் கொண்ட கட்சி அமைப்புகளையும், தலைமைகளையும் ஏற்படுத்தி பலமான இந்திய கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்ட முடிவு செய்கிறது.

டாங்கே கோஷ்டியின் மார்க்ஸிஸ — லெனினிஸத்துக்கு விரோதமான திரிபுவாத அரசியல் நிலைகளைக் கண்டித்து தேசியக் கவுன்சில் கூட்டத்தை விட்டு வெளியேறிய 32 தோழர்களையும் பாராட்டுகிறோம். சரியான மார்க்ஸிஸ்ட்—லெனினிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்ட உடனடியாக மகாநாடுகளை நடத்தக் கோருவதுடன் அவர்கள் எடுக்கும் சகல நடவடிக்கைகளையும் ஆதரிக்கிறோம்.

1) இந்திய கம்யூனிஸ்ட் கட்சி திருச்செந்தூர் கிளை.

[கிளையின் மொத்த அங்கத்தினர்கள் 23. மேற்படி தீர்மானத்தை ஆதரித்தவர்கள் 21. எதிர்ப்பும் ஆதரவுமற்றவர்கள் 2. (நடுநிலைமை)]

# டாங்கே கோஷ்டியின் தலைமையை ஏற்கமாட்டோம்

## புதுவை மாநில கம்யூனிஸ்ட்டுகள் முடிவு

### புது கமிட்டி அமைக்கப்பட்டது.

புதுவை ராஜ்ய கம்யூனிஸ்டுகளின் கூட்டம் 10-5-64 ஞாயிறு அன்று அரிய நகரில் கூடியது கட்சி அங்கத்தினர்களும், அனுதாபிகளும் 79 பேர் கூடினர்.

தோழர் வி. பி. சிந்தன் இன்றைய கட்சி நெருக்கடி பற்றியும், இன்றைய தலைமையின் திரிபுவாதப் போக்கைப் பற்றியும் எடுத்துக் கூறினர்.

இறுதியில் 19பேர் கொண்ட கமிட்டி ஒன்றும் 6 பேர் கொண்ட செயற்குழுவும் தேர்ந்தெடுக்கப்பட்டது. தோழர் T. S. அருணாசலம் கன்வீனராகவும் தோழர்கள் S. நடராஜன் M.L.A, D. K. ராமானுஜம், காரைக்கால் மணி S ஆதிமூலம் S. வெங்கடேசன் ஆகியோர் செயற்குழு உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்டனர். டாங்கே தலைமையை நிராகரித்தும், சஸ்பெண்டு செய்யப்பட்ட 32 தலைவர்கள் நிலையை ஆதரித்தும், இன்றைய புதுவைத் தலைமை அனுஷ்டிக்கும் சீர்திருத்தவாத போக்கையும் தொழிற் சங்க விரோதப்போக்கையும கண்டித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

# காஞ்சிபுரம் நகர கமிட்டி தீர்மானம்

இந்திய கம்யூனிஸ்டு கட்சி காஞ்சிபுரம் கிளை பேரவைக் கூட்டம் ஜில்லா கமிட்டி மெம்பர் அரு. முருகேசன் தலைமையில் 2, 3, 4, தேதிகளில் நடைபெற்றது. ஜில்லா கமிட்டி செயலாளர் தோழர் கே. எஸ். பார்த்தசாரதி அவர்கள் தேசிய கௌன்சில் தீர்மானம் பற்றியும் கட்சியின் இன்றைய நிலைமை குறித்தும் விரிவுரை நிகழ்த்தினர். கட்சி உறுப்பினர்கள் 140 பேர் பங்கு கொண்டனர்.

**நிறைவேறிய தீர்மானங்கள் வருமாறு :—**

1. அண்மையில் நடந்த தேசிய கௌன்சில் 32 பேர் மீது எடுத்த சஸ்பெண்ட் நடவடிக்கையை சரியல்ல என்று எடுத்துக் கூறுவதோடு அத் தீர்மானத்தை இப்பேரவைக் கூட்டம் கண்டிக்கிறது.

2. தேசிய கௌன்சிலால் வெளியேற்றப்பட்ட 32 அங்கத்தினர்கள் வெளியிட்ட அறிக்கையை இப்பேரவைக் கூட்டம் வரவேற்கிறது.

3. கோவையில் நடைபெற்ற தமிழ்நாடு கௌன்சில் கூட்ட தீர்மானங்களை இக்கூட்டம் நிராகரிக்கிறது.

# இரவோடு இரவாக

## நாற்காலிகளைத் தூக்கிக்கொண்டு

# திரிபுவாதிகளின் ஓட்டம்!

தென்னாற்காடு மாவட்டத் தோழர்கள் திரிபுவாதிகளை நிராகரித்துவிட்டனர். செயலாளர் ஜெயராமனும் இன்னும் ஓரிரு நபர்களும்தான் திரிபுவாதிகளுக்குத் துணைபோகும் பேர்வழிகள்!

மாவட்ட நிர்வாகக் குழு நடத்தப்பட்டது. அங்கு திரிபுவாதிகள் மண்டையில் பலத்த அடி விழுந்தது. மெஜாரிட்டி அவர்களை எதிர்த்தனர். அடுத்து மாவட்ட கவுன்சிலில் ஏதாவது ஆதரவு கிடைக்குமா என்று ஆழம் பார்க்க முயன்றனர். கவுன்சில் கூட்டத் தேதியும் நிர்ணயிக்கப்பட்டது. ஆனல் அதற்குள் அவர்களுக்கு உண்மையான தகவல் கிடைத்தது! அதாவது மாவட்டக் கவுன்சிலில் அவர்களுக்கு மெஜாரிட்டி இல்லை. 32 தலைவர்களை மாவட்டக் கவுன்சில் ஆதரிக்கப்போகிறது என்ற உண்மை தெரிந்தது. இது தெரிந்ததுதான் தாமதம், மேற்கூறிய கவுன்சில் கூட்டம் நடத்த வர விருந்த மணலி கந்தசாமியை வரவேண்டாம் என்று தந்தியடித்தார்; அதுமட்டுமல்ல, சேலத்தில் சாமுவேல் செய்ததுபோல், ஜெயராமன் கவுன்சில் உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் தந்தி அடித்தார். வராதீர்! வராதீர்! என்று. அப்படியிருந்தும் பல தோழர்கள் வந்து மாவட்டக் காரியாலயத்தைப் பார்த்தால் காரியாலயம் காலியாக இருந்தது! காரியாலயத்திலிருந்த நாற்காலிகளும், மின்சார விசிறியும், ரிகார்டுகளும் இரவோடு இரவாக தூக்கிச் செல்லப்பட்டுவிட்டன. விசாரித்ததில் இது ஜெயராமன் வேலைதான் என்று தெரிந்தது. நம் கட்சிக்குச் சொந்தமான சாமான்களை கட்சி ஆதரவற்ற ஜெயராமன் அள்ளிக் கொண்டுபோய் மற்றொரு திரிபுவாதி வீட்டில் வைத்துக்கொண்டு அது கட்சிக் காரியாலயம் என்று ஜனசக்தியில் அறிவித்துள்ளார்.

கட்சி ஆதரவற்ற திரிபுவாதிகள் எந்த அளவிற்கு வீழ்ச்சியடைந்துள்ளனர் என்பதற்கு இது ஓர் உதாரணம். தென்னாற்காடு மாவட்டத்தில் கட்சி அலுவலக சாமான்கள்தான் அவர்களுக்குக் கிடைத்தன. ஆனல் கட்சித் தோழர்களின் நெஞ்சங்களை இழந்தனர்.

# செங்கோட்டையில் புதிய கட்சித் தலைமை தேர்ந்தெடுக்கப்பட்டது

10-5-64 ஞாயிற்றுக்கிழமை செங்கோட்டை கம்யூனிஸ்ட் கட்சியின் ஜெனரல் பாடிக் கூட்டம் நடைபெற்றது கூட்டத்திற்கு கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களும் அனுதாபிகளுமாக சுமார் 40பேர் கலந்து கொண்டார்கள் தோழர் சு. பாலவிநாயகம் இக்கூட்டத்தில்கலந்து கொண்டு விளக்க உரையாற்றினர். கடைசியில் தோழர்கள் சி. காளிமுத்து என். பெருமாள் கே, ராமர் எஸ். சுடலையாண்டி என். பரமசிவன் இவர்களைக்கொண்ட ஓர் இணைப்புக் கமிட்டியும் தோழர்கள் கி. காளிமுத்து கன்வீனராகவும் கே.ராமா உதவி கன்வீனராகவும் என் பெருமாள் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

இக்கூட்டத்தில் டாங்கே கோஷ்டியின் மார்க்ஸிஸ—லெனினிஸத்துக்கு விரோதமான திரிபுவாத அரசியல் நிலைகளைக் கண்டித்தும், தேசியக் கவுன்சில் கூட்டத்தை விட்டு வெளியேறிய 32 தோழர்களைப் பாராட்டியும், சரியான மார்க்ஸிஸ—லெனினிஸ கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்டி வளர்க்க உடனடியாக மகாநாடுகளை நடத்தவேண்டுமென்று கோருவதுடன் அவர்கள் எடுக்கும் சகல நடவடிக்கைகளையும் ஆதரிப்பதென்றும் முடிவு செய்தது.

முதல் பக்கத் தொடர்ச்சி

டாங்கே அக் கிளர்ச்சியை தொடர்ந்து நடத்தினர்.

கம்யூனிஸ்ட் மந்திரிசபை கேரளாவில் அமைந்தபொழுது அதை கவிழ்க்க காங்கிரஸ் கட்சியும், பிற்போக்கு சக்திகளும் கூட்டணி அமைத்து ஐ.ஏ.எஸ். அதிகாரிகளையும் உயர்தர போலீஸ் அதிகாரிகளையும் தூண்டிவிட்டு பல இன்னல்களை சிருஷ்டித்ததை நாம் அனைவரும் அறிவோம். அந்த முயற்சியின் ஒரு பகுதியாகவே மூன்றுது ப்பாக்கி பிரயோகங்கள் நடைபெற்றது. நமது கேரள அமைச்சர்கள் அங்கு சென்று தொழிலாளிகளுக்கு ஆறுதல் கூறி, தக்க விசாரணை நடத்தி அந்த அதிகாரிகளைத் தண்டித்ததையும், நமது தலைவர்கள் பிரேத ஊர்வலங்களில் கலந்துகொண்டதையும் நமது நாட்டின் தொழிலாளி வர்க்கமே பாராட்டியது! ஆனல் டாங்கேயின் பிரதிபலிப்பு எப்படியிருந்தது தெரியுமா?

''தொழிலாளி வர்க்கத்தின் நம்பிக்கையை கேரள கம்யூனிஸ்ட் சர்க்கார் இழந்துவிட்டது'' என்றும், உடனடியாக மந்திரி சபை ராஜினமா செய்ய வேண்டுமென்றும் அவர் பத்திரிகைகளுக்கு அறிக்கை விட்டார். கட்சி அணிகளிலே இதைக் கண்டதும் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது. பல கட்சிக் கமிட்டிகள் டாங்கேயின் மீது நடவடிக்கை எடுக்கக் கோரியது. ஆனல் டாங்கே நீண்ட விவாதத்திற்குப் பிறகும் தவறை ஒப்புக்கொள்ள மறுத்தார்.

மத்திய அரசாங்க ஊழியர்களின் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வேலை நிறுத்தம் டாங்கேயின் அப்பட்டமான துரோகப் போக்கை தோலுரித்துக் காட்டியது. அந்த வேலை நிறுத்தத்தை தடுப்பதற்கும், ஒத்திப் போடுவதற்கும் காங்கிரஸ் அமைச்சர்களான நந்தா சாஸ்திரி போன்றோருக்கு டாங்கே பெரும் உதவி செய்ததை அறிந்துகொள்ள கட்சித் தலைமைக் குழுவில் நடைபெற்ற விவாதக் குறிப்புகளே (மினிட்ஸ்) சிறந்த சான்ருக விளங்குகிறது. பிறகு வேலை நிறுத்தத்தை உடைப்பதற்கும் அவர் அரசாங்கத்திற்கு உதவி செய்தார். தொழிற்சங்க இயக்கத்துடன் நேரடி தொடர்பில்லாத சாதாரண கட்சி ஊழியர்களையும் மத்திய அரசாங்க சிப்பந்திகளையும் போராட்டத்தையொட்டி அரசாங்கம் பிரகடனம் செய்த அவசர சட்டத்தின் கீழ் கைது செய்தபோதும் டாங்கே மட்டும் அன்று கைது செய்யப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. வேலை நிறுத்தத்திற்குப் பிறகு நிலைமையைப் பரிசீலித்த செயற்குழு, வேலை நிறுத்தத்திற்குப் போதிய வழிகாட்டலும் உதவியும் செய்யவில்லை என்று தன்னைத்தானே கண்டித்து தீர்மானம் நிறைவேற்றியது. ஆனல் மத்திய செயற்குழுவின் சார்பில் தொழிற்சங்க இயக்கத்திற்கும் பொறுப்பாயிருந்த டாங்கேயை விமர்சித்து தீர்மானம் நிறைவேற்ற ஒரு சிலர் தயங்கியதின் விளைவாகத்தான் மேலெழுந்தவாரியான இந்தத் தீர்மானம் நிறைவேற நேர்ந்தது.

# P. தேவராஜ்

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரசில் தனது ஆதிக்கத்தை நிலைநாட்டும் முறையில் கோஷ்டி சேர்த்து பணியாற்றினர் டாங்கே. தொழிற்சங்கம் சம்பந்தப்பட்ட முக்கியமான கொள்கைப் பிரச்சினைகளையும்கூட கட்சிக்குள் விவாதிக்க அவர் மறுத்தார். இதற்காகவே தொழிற்சங்கங்களில் பிராக்ஷன் அமைக்கும் நீண்டகால பழக்கத்தை உடைத்தெறிந்தார் டாங்கே. இருதூண் கொள்கை என்ற பெயரால் தொழிலாளி வர்க்கத்தின் புரட்சிகரமான போராட்டங்களை உடைக்கும் நாசகரமான ஒரு கொள்கையையும் அவர் உருவாக்கினர். தொழிற்சங்க மகாநாட்டில் இதுபற்றிப் பேசுவதற்கு முன்னல் கட்சியின் மத்திய

## தொழிற்சங்கங்களை திட்டமிட்டு சீர்குலைத்தார்!

குழுவிலும், ஏன் செயற்குழுவிலும் அவர் இந்த பிரச்சினையைப் பற்றி ஆலோசனை கூட கேட்கவில்லை!

தொழிற்சங்க இயக்கங்களின் ஒற்றுமையை சிதறடித்ததில் டாங்கேக்கு பெரும் பங்குண்டு! பலம் பொருந்திய இந்தியாவிலேயே பெரும் போராட்ட பாரம்பரியங்களைக் கொண்ட ரயில்வே தொழிலாளர்களின் ஒன்றுபட்ட ரயில்வே யூனியனை உருவாக்கும் பணியை உடைத்தெறிந்தவர் டாங்கே! ரெயில்வே தொழிலாளர்களுக்கு இந்தியா முழுவதும் ஒன்றுபட்ட ஒரு ஸ்தாபன அமைப்பை உருவாக்கக் கூடாதென்று எதிர்த்து அந்த முயற்சியை சிதறடித்தவர் டாங்கே! தென்னிந்திய ரயில்வே தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்தவர்களைக் கேட்டால நன்கு தெரியுமாம். ஏன்தோழர்கல்யாண சுந்தரம் போன்றவர்களிடமே கேட்கலாமே?

கோவையில் நடைபெற்ற ஏ.ஐ.டி.யுஸி மகாநாட்டில் கட்சித் தோழர்களையும், கட்சி அமைப்பையும் டாங்கே எப்படி புறக்கணித்தார் என்பது தோழர்கள் கே.டி.கே தங்கமணி, எம். கல்யாணசுந்தரம் போன்றவர்களுக்கே நன்கு தெரியும்!

பொதுஜன ஸ்தாபனங்களில் பணத்தை கையாளப்பட்டது சம்பந்தமாக இவர்மீது விசாரணை நடத்த ஓர் கமிஷன் நியமிக்கப்பட்டது. ஆனல் மிரட்டி மீன் பிடிக்கும் வித்தையை நன்கு கற்றறிந்த டாங்கே அந்தக் கமிஷன் வேலையை முடமாக்கினர். உலக தொழிற்சங்க சம்மேளனத்தின்

## தலைமைப் பதவிக்கு வேட்டை!

தலைவராக தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பதற்காக, தான் ''இந்தியாவில் கற்றறிந்த வேலையை'' அங்கும் காட்டினர். உலக தொழிற்சங்க சம்மேளனத்தின் மிகவும் பலம் வாய்ந்த இத்தாலிய பிரதிநிதிகளிடமிருந்தும் பிற பிரதிநிதிகளிடமிருந்தும் எழுந்த எதிர்ப்பினல் டாங்கேயின் ஆசை நிறைவேறவில்லை.

அமிருதசரஸ் கட்சி மகாநாட்டில் தன்னுடைய சீடர்களைத் தூண்டிவிட்டு கட்சிக்கு ஒரு தலைவர் (Chairmen) வேண்டுமென்ற ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற முயன்ருர். கட்சியின் அமைப்பு விதிகளில் இம் மாற்றம் கொண்டுவந்தால் கட்சியின் தலைவனகத்தான் வர முடியும் என்பதற்காக இந்த முயற்சியை செய்தார். விரல்விட்டு எண்ணக்கூடிய நபர்கள்தான் இதற்கு ஓட்டளித்தார்கள். விஜயவாடாவிலும் இம் முயற்சி தோற்கடிக்கப்பட்டது. 1962 ஏப்ரல் மாதம் நடைபெற்ற தேசியக் கவுன்சிலில் மீண்டும் இந்தக் கோரிக்கை வைக்கப்பட்டது. 3 நாட்கள் விவாதம் நடைபெற்றது. தன்னைத் தலைவராகத் தேர்ந்தெடுக்காவிட்டால் கட்சியை இரு கூருக்குவோம் என்று பயமுறுத்தினர். வழக்கம் போல் கட்சி ஒற்றுமையின் பெயரால் டாங்கேயின் இந்த நிர்ப்பந்தத்தை தேசியக் கவுன்சில் ஏற்றுக்கொண்டது. கட்சியைக் கேட்காமல் தனிப்பட்ட முறையில் எந்த அறிக்கையும் விடமாட்டேனென்று நன்னடத்தை வாக்குறுதி கொடுத்து பதவிக்கு வந்த சில மாதங்களுக்குள்ளேயே தன் வாக்குறுதிகளை காற்றில் பறக்க விட்டார்.

அவசரகால சட்டத்தை ஒட்டி கட்சித் தலைவர்களும், தொழிற்சங்கத் தலைவர்களும் கைது செய்யப்பட்ட சமயத்தில் டெல்லியில் நடைபெற்ற ஏ.ஐ.டி.யூ.சி. நிர்வாகக் கூட்டத்தில் அதைக் கண்டித்து சில தோழர்கள் தீர்மானம் கொண்டுவந்தார்கள். ஆனல் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் என்று சொல்லிக்கொள்ளக்கூடிய டாங்கே அந்த தீர்மானத்தை எதிர்த்ததிலிருந்தே டாங்கேயுடைய அரசியலை நாம் புரிந்துகொள்ள முடியும்.

பிரதமர் நேருவுக்கு டாங்கே 1962-ம் ஆண்டு அனுப்பிய பிறந்த தின வாழ்த்துச் செய்

## இந்திய முதலாளி வர்க்கத்தின் சேவகன்!

தியை பார்த்தால் இவருடைய தத்துவார்த்த, வர்க்கக் கண்ணேட்டம் எங்குபோய் முடிகிறதென்று நன்கு விளங்கும்! பிரதமர் நேருவுக்கு வாழ்த்துச் செய்தி அனுப்புவதைப்பற்றி யாரும் ஒன்றும் சொல்லப்போவதில்லை. ஆனல் இந்திய முதலாளி வர்க்கத்தின் ஏகப் பிரதிநிதிக விளங்கும் காங்கிரஸ் அரசாங்கத்தின் பிரதம மந்திரிக்கு அனுப்பிய வாழ்த்துச் செய்தியில் டாங்கே என்ன கூறுகிருர்? ''பண்டிட்ஜி! உங்கள் காலத்திலேயே உங்கள் தலைமையிலேயே இந்த நாட்டில் சோஷலிஸ ஆட்சி ஏற்பட வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம்''! இந்திய முதலாளி வர்க்கமும், அதனுடைய பிரதிநிதிகளும் சோஷலிஸத்தைக் கொண்டு வந்துவிடுவார்களென்று டாங்கே நினைத்தார் என்றுல் இவருடைய வர்க்கக் கண்ணேட்டம் எங்கு போய் முடிகிறதென்பதை சொல்லவும் வேண்டுமா?

அவசரகால நிலைமைக்குப் பிறகு டாங்கேயினுடைய அரசியல் போக்குகளையும் இந்திய முதலாளி வர்க்கத்திற்கு பணிபுரியும் சேவகனக அவர் மாறியதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நினைவு படுத்திக்கொள்வது நல்லது. அது மட்டுமல்ல! கட்சியின் பாதுகாப்பு விஷயங்கள், உள்கட்சி விவாதங்கள் முதலியவைகளை முதலாளித்துவ பத்திரிகைகளுக்கும், அரசாங்கத்திற்கும் கொடுக்கும் பணியை அவர் தொடர்ந்து செய்துவந்துள்ளார், கட்சி விரோத, கட்சியை சீர்குலைக்கும் பத்திரிகையென்று கூறப்பட்ட 'லிங்க்' பத்திரிகை கம்பெனியைச் சேர்ந்த 'பேட்ரியட்' பத்திரிகைக்கு 30,000 ரூபாய் கடனக கொடுத்திருக்கிருர். அந்த கடன் கொடுத்த பணத்திற்கு பங்குகள் 'எஸ். அம்ராட்' என்றபெயரால் அப் பத்திரிகையில் வாங்கியிருக்கிருர். இந்த குட்டு வெளியிட்டவுடன் அவர் செய்த ஜால வித்தைகளும், மாய்மாலங்களும் ஏராளம். 'ஏன் மாறு பெயரில் பங்கு வாங்கியிருக்கிறீர்கள்' என்று நிருபர்கள் கேட்டதற்கு 'எனது பெயர் வர்த்தக காரணங்களுக்கு பத்திரிகைகளில் அடிபடுவதை நான் விரும்பவில்லை' என்று கூறி, தான் 'பேட்ரியட்' பத்திரிகையில் கள்ள பணத்தைக் கொண்டு பங்கு வாங்கிய விஷயத்தை கட்சி அணிகளிடமிருந்து மூடி மறைக்க விரும்புகிருர்.

இப்படிப்பட்ட ஒரு நபரை கள்ளத்தனமாக பணத்தை பதுக்கி வைத்திருக்கும் ஒரு நபரை பூர்ஷ்வா வர்க்கத்தின் ஏவலாளியாகச் செயல்படும் ஒரு நபரை தலைவராக வைத்துக்கொண்டு ஒரு புரட்சிகரமான கட்சி உறுதியாகச் செயல்பட முடியுமா? நிச்சமாக முடியாது.

டாங்கேயின் 40 ஆண்டுகால அரசியலையும், செயல்களையும் ஆழமாகப் பரிசீலிப்பது மிக மிக அவசியமானது.

பதினேழாண்டு சிறைவாசம் என்றெல்லாம் பேசி உண்மைகளை மூடி மறைப்பது உண்மையான ஒரு தொழிலாளி வர்க்கக் கட்சிக்கு அழகல்ல; அவ்வாறு மூடி மறைப்பது தொழிலாளி வர்க்க கட்சியின்கொள்கைஉணர்வையும், பாதுகாப்பையும் சிதறகுத்து முடிவில் கட்சி அனைத்தையுமே அழித்துவிடும்.

தொழிலாளி வர்க்கத்தின் எண்ணற்ற போராட்டங்களாலும், சிறந்த தியாகங்களினலும் வளர்க்கப்பட்ட கட்சியான கம்யூனிஸ்ட் கட்சியில் அன்னிய வர்க்கத்தின் பிரதிநிதிகள் புல்லுருவிகள்போல் நுழைந்துள்ளதை உலக கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றில் காண முடியும். டாங்கேயின் நடவடிக்கைகளும், கொள்கைகளும் ஒவ்வொரு கட்டத்திலும் கட்சியை சீர்குலைத்தது. இன்று அது உச்சகட்டத்தை அடைந்துள்ளது. அதன் விளைவுதான் இன்று கம்யூனிஸ்ட் கட்சியில் பிளவேற்பட்டது டாங்கே கோஷ்டியின் தலைமையை ஆயிரமாயிரம் கட்சி ஊழியர்கள் தமிழகத்திலும், இந்தியாவிலும் நிராகரித்துவருகிருர்கள். டாங்கே கோஷ்டி கம்யூனிஸ்ட் இயக்க வரலாற்றிலிருந்து பூரணமாக அகற்றப்படும் நாள் வெகு தொலைவிலில்லை!

# புளுகினிச் சித்தர்கள்!

கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குமேல் நிற்காது என்பார்கள். ஆனல் திரிபுவாதிகள் இருக்கிருர்களே—மார்க்ஸிய புரட்டர்கள்—அவர்களது புளுகுகள் எட்டு நிமிடத்துக்கு மேல் நிற்காது! திரிபுவாதிகளின் கையில் சிக்கியுள்ள கம்யூனிஸ்டு வார இதழான நியூ ஏஜில் புளுகுணி சித்தர்களின் தலைவர்களில் ஒருவரான ரொமேஷ், சந்திரா என்பவர் பழைய புளுகு மூட்டை ஒன்றை அவிழ்த்துவிட்டுள்ளார். அதிலிருந்து புடை நாற்றமெடுக்கும் பொய்கள் சில துள்ளிக் குதித்து வந்துள்ளன!

அவர் அவிழ்த்துவிடும் பொய்களில் விஜயவாடா கட்சிமாநாட்டைப் பற்றியது ஒன்று அவர் கூறுகிருர்: அந்த மாநாட்டில் தேசியக் கவுன்சிலில் இடதுசாரிகளுக்குப் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கவில்லையென்ருல் மகாநாட்டிலிருந்து வெளியேறிவிடுவோம் என்று இடதுசாரிகள் மிரட்டினுர்கள் என எழுதியுள்ளார்.

பசித்தவன் பழங்கணக்குப் பார்ப்பதுபோல் காங்கிரசுக்கு வால் பிடிக்கும் தனது கொள்கைக்குத் தோல்விமேல் தோல்வி கண்டு வருவதால் பச்சைப் பொய் பேச முன்வந்துள்ளார்.

பொய் சொல்பவன் ஒரே வார்த்தையில் பொய் சொல்லிவிட முடியும். ஆனல் பொய்யர்கள் மண்டையில் சரியான பதில் அடி கொடுக்க வேண்டுமானல் ஒரே வார்த்தையில் பொய் என்று பதில் கூறினல் மட்டும்—போதாது, சில பல வார்த்தைகளை இதற்காகச் செலவிட வேண்டியிருக்கிறது!

திரிபுவாதிகளுக்கு நாணயமும் இல்லை! பொய் பேச நாக்கு கூசுவதுமில்லை! தேசியக் கவுன்சிலில் தங்கள் ஆட்களை நிரப்பி வைக்க விஜயவாடாவிற்கு முன்பு பல மாதங்களாக சதி வேலைகள் செய்துவந்தார்கள் டாங்கே கோஷ்டியினர். அதில் ஓரளவு வெற்றியும் பெற்ருர்கள்! விஜயவாடா மாநாடு அவர்களுடைய சதியை நிறைவேற்றும்வாய்ப்பை அளித்தது. சதிகாரர்களுக்கு மேற்கு வங்கத்திலும் தமிழ் நாட்டிலும் அன்று அதிக செல்வாக்கு இல்லை. ஒவ்வொரு ராஜ்யமும் தேசியக் கவுன்சிலில் தங்கள் ராஜ்யத்தின் சார்பில் யார் இருப்பது என்பதை முடிவு செய்ய உரிமை பெற்றிருந்தது. மேற்கு வங்கத்திலிருந்தும், தமிழ் நாட்டிலிருந்தும் சென்ற பிரதிநிதிகள் திரிபுவாதிகள் சிலரை தேர்ந்தெடுக்க மறுத்தனர்! உடனே தலைமை பீடத்திலிருந்த டாங்கே கோஷ்டி ஒரு சதி செய்தது! மேற்கு வங்கத்தில் இருந்து சோமநாத லாகிரி ஆகியோரையும், தமிழ் நாட்டிலிருந்து என். கே. கிருஷ்ணன் போன்ருேரையும் அந்தந்த ராஜ்ய பிரதிநிதிகளின் விருப்பத்துக்கு விரோதமாக எப்படியாவது கவுன்சிலுக்குள் கொண்டுவந்துவிடவேண்டும் என்பதற்காக இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் சட்டதிட்டத்தையே திருத்தியது. திருத்தி என். கே. கிருஷ்ணன், பவானிசன் போன்ற அப்பட்டமான சந்தர்ப்பவாத திரிபுவாதிகளை தேசிய கவுன்சிலுக்குள் நுழைத்தது.

இவ்வாறு தங்களுக்கு மெஜாரிட்டி தேடுவதற்காக டாங்கே கோஷ்டி கட்சியின் சட்டத்தையே திருத்தியது.

மற்ருெரு உதாரணம். யாவருக்கும் தெரிந்த பிரபல கம்யூனிஸ்ட் தலைவர்கள் பி. டி. ரணதிவேயையும், எஸ். வி. பருலேகரையும் டாங்கே கோஷ்டியின் தலைமையிலிருந்த மகாராஷ்டிர பிரதிநிதிகள் தேசியக் கவுன்சிலுக்கு தேர்ந்தெடுக்க மறுத்துவிட்டனர். தங்களுடைய கையாட்களான என். கே. கிருஷ்ணன், பவானிசென் போன்றவர்களை முறையே தமிழ்நாடு, வங்க பிரதிநிதிகள் தேசிய கவுன்சிலுக்குத் தேர்ந்தெடுத்தால் ரணதிவே, பருலேகரைதாம் தேர்ந்தெடுப்போம் என்று பேரம் பேசினர்.

இவ்வாறு கட்சியினுடைய புனிதமான பழக்கவழக்கங்களுக்கு மாருக, டாங்கே கோஷ்டி கட்சித் தலைமைப்பீடத்திற்கு நடக்கும் தேர்தலை மாட்டு வியாபாரச் சந்தையாக மாற்றியது! அதனல்தான் தோழர் ஜோதிபாசு மாநாட்டில் பேசும்பொழுது மிகப் பெருவாரியான ராஜ்யப் பிரதிநிதிகள் விருப்பத்திற்கு விரோதமாக, அவர்தம் கட்சி பக்தியையும். கட்டுப்பாட்டையும் பயன்படுத்திக்கொண்டு அவர்களுக்கு விருப்பமில்லாதவரை அவர்கள் மீது திணித்தால் "என்னைப்போன்றவர்கள் கட்சியின் தேசியக் கவுன்சிலில் இருப்பதைப் பற்றியே யோசிக்கவேண்டும் என்ருர். இதில் தவறென்ன?




தங்கள் ஆட்கள் எண்ணிக்கையை கவுன்சிலில் அதிகரிப்பதற்காகவே அதன் மொத்த எண்ணிக்கையை 100லிருந்து 109ஆக உயர்த்தியது டாங்கே கோஷ்டி. இந்த ஒன்பது பேரில் இரண்டே இரண்டு பேர்தான் இடதுசாரியினர். (பங்கிம் முக்கர்ஜி—வங்கம், எஸ். வி. பருலேகர்—மகா மகாராஷ்டிரம்) மீதியுள்ள ஏழு பேர் டாங்கே கோஷ்டியினராவர்! அன்று இடதுசாரியினர் காட்டிய பொறுமையினல்தான் கட்சியில் பிளவு ஏற்படாமல் பாதுகாக்கப்பட்டது. நன்ருகத் தெரிந்தே டாங்கே கோஷ்டியினருக்கு அதிக ஸ்தானங்களைக் கொடுத்து அதன் மூலமாகவாவது டாங்கேயின் சீர்குலைவுகளை தடுக்க முடியுமா என்று பார்ப்பதற்காகவே இந்த பயங்கரமான பரிசோதனைக்கு அன்று இடதுசாரியினர் இசைந்தனர்.

ஆனல் தமக்கு கொடுக்கப்பட்ட மெஜாரிட்டியை வைத்துக்கொண்டு டாங்கே கோஷ்டி செய்ததென்ன? ஒற்றுமை வளர்ந்ததா? இல்லை. கட்சிக்கே பச்சைத் துரோகம், மித்திர பாதம், எதிரியிடத்தில் கட்சியைக் காட்டிக்கொடுத்தது பாட்டாளி வர்க்க கட்சியை முதலாளிகளின் கட்சியான காங்கிரசினிடம் அடகு வைத்தல், கட்சித் தோழர்களின் தேசபக்தியையும், கட்சி பக்தியையுமே சோதனைக்குள்ளாக்குதல்—இவையே டாங்கே கோஷ்டி சாதித்த சாதனைகள். நரிக்கு இடம் கொடுத்தால் கிடைக்கு ஓர் ஆடு கேட்கும் என்பார்கள்! தேளுக்கு மணியம் கொடுத்தால் ஆளுக்கு ஓர் கொட்டு கொட்டும் என்பார்கள். இன்று நடப்பதும் இது தான்!

கட்சித் தோழர்கள்மீது நீசத்தனமான தாக்குதல் தொடுத்துள்ள டாங்கேகோஷ்டி, குதிரை கீழே தள்ளியதுமல்லாமல் குழியும் பறிப்பதுபோல, கட்சியைப் பிளவுபடுத்த சகலமும் செய்துவிட்டு, விஜயவாடாவில் கட்சியைப் பிளவுபடுத்த முயன்றது இடதுசாரிதான் என்று அங்கலாய்க்கிறது. பொய்யர்கள் பிறர் மீது பொய்க் குற்றம் சுமத்திதான் தப்பித்துக்கொள்ள முயல்வார்கள்! ஆனல் கெட்டிக்காரன் புளுகும் எட்டு நாளைக்குமேல் நின்ற வரலாறே இல்லையே!

மார்க்ஸியப் புரட்டர்கள் புளுகுணிச் சித்தர்களாக மாறியதில் ஆச்சர்யமில்லை.

★ ★ ★

## துக்ளக் தர்பார்!

கன்னக்கோல் திருடன் காஷாய உடை தரித்து கமண்டலம் தாங்கி வருவதும் உண்டு! இராவணன் சீதையைத் தூக்கிச் செல்ல சன்யாசி வேடத்தில் தானே வந்தான்!

காலமெல்லாம் சக தோழர்களுக்கு தீமை புரிவதையே தொழிலாகக் கொண்ட டாங்கே கோஷ்டி இன்று இடதுசாரிகளால்தாம் தாக்கப்பட்டவர் போல் நடிக்கின்றனர்!

நியூ ஏஜ் பத்திரிகையில் டாங்கேக்கு இடதுசாரிகள் பெரிய அநீதி விளைவித்துவிட்டதாக ஒரு செய்தி வந்துள்ளது. என்ன தெரியுமா?

டெல்லியில் 'நார்த் அவினியூ' என்ற இடத்தில் குடியிருந்த டாங்கேயின் இன்றைய இருப்பிடம் ஒரு இடதுசாரி கம்யூனிஸ்ட் எம்.பி.க்கு விடப்பட்ட இடமாகும். தன் குடும்பத்தைக் கொண்டுவந்து வைக்க அவ்விடத்தைக் காலி செய்து தாருங்கள் என்று டாங்கேயிடம் அந்தத் தோழர் (நிரன்சென்) பல நாட்களாகக் கேட்டுவந்தார். அதையே இன்றும் கேட்டார், இதில் என்ன தவறு? தனக்குக் கொடுக்கப்பட்ட ஒரு இடத்தில் தன் குடும்பத்துடன் சில நாள் வந்து தங்க வேண்டுமென்று விரும்புவது தவரு? திருவாளர் டாங்கே தான் எல்லா சவுகரியங்களையும் அனுபவிக்கப் பிறந்தவரோ? தனக்கு உரிமையில்லாத ஒன்றை உரியவருக்குக் கொடுக்க டாங்கேக்குமனமில்லை.

பயங்கர குற்றம் சாட்டப்பட்ட

அட்டைபோல் ஒட்டிக்கொண்டி பின்னர்கூட தலைமைப் பதவியிலிருக்கும் டாங்கே மற்ருெரு தோழனுக்குக் கொடுத்த வீட்டையும் அபகரித்துக்கொள்ள விரும்புவதில் ஆச்சர்யமில்லையல்லவா?

தான் குடியிருக்கும் வீட்டிலிருந்து இடதுசாரிகள் தன்னை வெளியேற்றிவிடத் திட்டமிடுகிருர்கள் என்று செய்தி வெளியிடும் டாங்கே 1957-ல் தான் செய்ததை மறந்துவிட்டாரா?

புது டெல்லி, அசோகா ரோடு நெம்பர் 4 கட்டிடம் பாராளு மன்ற கம்யூனிஸ்ட் தலைவருக்குக் கொடுக்கப்பட்ட கட்டிடமாகும்!

முதல் தேர்தலுக்குப் பின் அமைந்த முதல் பார்லிமெண்டில் தோழர் ஏ. கே. கோபாலன் கம்யூனிஸ்ட் தலைவரானுர். அவருக்கு எந்த இடம் கொடுக்கப்பட்டது. அந்த வீட்டில் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசியான காலஞ்சென்ற தலைவர் அஜய் கோஷும் இருந்தார்.

இரண்டாவது பொதுத் தேர்தலில் டாங்கேயும் பார்லிமெண்டிற்குத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர். அவரைப் பார்லிமெண்ட் கம்யூனிஸ்ட் குழுவின் தலைவராக்கினர். தலைவரானதுதான் தாமதம்! டாங்கே தன்னுடைய துக்ளக் தர்பாரை ஆரம்பித்துவிட்டார்!

தன் சக தோழரான கோபாலனிடம் சென்று அந்த இடம் தனக்குரியது; அதைச் சீக்கிரமே காலி செய்து கொடுங்கள் என்று ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் கூட போதும்! கோபாலன் வேறு இடம் போய் இருப்பார்!

ஆனல் டாங்கே இந்தத் தோழமை வழியைப் பின்பற்றவில்லை. பரம எதிரிகளிடம் நடப்பதுபோல் நடந்துகொண்டார்! நேராக அரசாங்கத்திற்கே கடிதம் எழுதினுர்! மற்ருெரு நபரிடம் இருக்கும் கம்யூனிஸ்ட் எதிர் கட்சித் தலைவரின் வீட்டை எடுத்து என்னிடம் ஒப்படைக்க வேண்டுமென்று கடிதம் எழுதினுர்! அரசாங்கத்தின் உதவி கொண்டு தன் சொந்தத் தோழனையே தாக்கத் தயங்காதவர் டாங்கே என்பதற்கு இது ஓர் உதாரணம்!

இவ்வாறு டாங்கே அந்த வீட்டைக் கையிலெடுத்துக்கொண்ட பின் அடுத்துத் தோழர் அஜய் கோஷை அங்கிருந்து வெளியேற்றத் திட்டமிட்டார்!

அப்பொழுது தோழர் அஜய்க்கு உடல் நலமில்லை. பெங்களூரில் தன் மனைவியுடன் ஓய்வெடுத்துக்கொண்டு தங்கி இருந்தார். அந்த சமயத்தில் டெல்லியிலிருந்து ஒரு தந்தி வந்தது. "அடுத்த 24 மணி நேரத்திற்குள் உமது சாமான்களை எடுத்துக்கொண்டு நெம்பர் 4, அசோகா ரோடிலிருந்து நீர் வெளியேருவிட்டால் உமது சாமான்கள் அசோகா ரோடில் கிடக்கும்" என்று கண்டிருந்தது அந்தத் தந்தியில்!

இந்த செய்தியைக் கேட்டது தான் தாமதம். சாமான்களைவிட கட்சியின் மானத்தைப் பாதுகாப்பது அவசியம் எனக் கருதிய அஜய் திருமதி அஜய்கோஷை விமானத்தின் மூலம் டெல்லிக்கு அனுப்பி தமது சாமான்களை எடுத்துக் கொண்டார்!

இது டாங்கே தன் கட்சித் தலைவனுக்குத் தந்த மரியாதைக்கு ஒரு உதாரணம்.

இத்தகைய ஒரு நபர் இன்று தோழர் நிரேன்கோஷ்

(2-ம் பக்கம் பார்க்க)

Edited and Published by Sri M. N. Ravunni, 2, Alandoor Road, Saidapet, Madras-15.
Printed by Sri A. N. Sathyanarayanan, Geetha Printing Works, 4, Hospital Road, Saidapet, Madras-15.